# தேவாலயம்

(இந்திய அரசாங்கத்தினால் முதியோர் இலக்கியத்திற்கென
சிறந்த புத்தகமென்று முதற்பரிசு வழங்கப்பெற்ற நூல்)

இந்திய மொழிகள் அனைத்திலும் மொழி பெயர்க்கப்படுவது.

(பேராசிரியர் உயர்திரு தெ. பொ. மீனாட்சி சுந்தரனார்,
துணைவேந்தர், மதுரைப் பல்கலைக் கழகம், தலைவர், மாநில முதியோர்க்
கல்விக் கழகம்; அவர்களுடைய முன்னுரையுடன் கூடியது)

தமிழாக்கம் :

திரு வே.நீ. தட்சிணாமூர்த்தி, பி.ஏ., பி.டி.,

வெளியிடுவோர் :

மாநில முதியோர்க் கல்விக் கழகம்

சென்னை : : தென் இந்தியா

TAMIL : S. S. S. G. Series No. 40.

# Dévaalayam

*(First prize awarded by the Government of India as the best book for Neo-Literates. Translated into all Indian Languages)*

ORIGINAL : DEOOL MARATHI

*by*

SHRI VASANT NILKANTH GADRE, M.A., B.ED., T.D.,

*Translated by*

© SHRI N. DHAKSHINAMOORTHI, B.A., B.T.,

WITH THE FOREWORD OF

PROF. T. P. MEENAKSHISUNDARAN,
Vice-Chancellor of Madurai University &
President of State Adult Education Association, Madras.

PRINTED AND PUBLISHED BY

Janatha Printing & Publishing Co., Private Limited,
66, Bells Road, Triplicane, Madras-5.

ON BEHALF OF

Shri Sampoorna Saraswathi Granthalaya
(Publishers of Multi-Lingual Literature)
NELLIKUPPAM : : SOUTH INDIA

FOR

STATE ADULT EDUCATION ASSOCIATION
MADRAS-14 SOUTH INDIA

Price Rs. 1.75

# முன்னுரை

கல்வி பரவுகிறது. ஏறக்குறைய எல்லாக் குழந்தைகளும் பள்ளிக்கூடம் போகிறார்கள். ஆனால் பலர் தங்கள் இளமையில் இந்த வாய்ப்பினைப் பெறவில்லை. அவர்கள் எழுத்தறிவில்லாமலே இருப்பதா? இவர்களுக்காகவே முதியோர்க் கல்வி இயக்கம் தோன்றியுள்ளது. எழுத்துக் கூட்டத் தெரிந்தாலும் குழந்தைகள் நூல்களைப் படிப்பதற்குப் அவர்களுக்குப் பிடிக்காது. எனவே அவர்கள் அறிவுக்கும் அனுபவத்திற்கும் தகுந்த நூல்களை இயற்றித்தரவேண்டும். அப்படிப்பட்ட நூல் தான் இதோ வெளிவருகிறது. மராத்தி மொழியில் முதலில் எழுதப்பெற்ற இந்த நூல் இந்தியத் துரைத்தன முதற்பரிசு பெற்றது. இந்திய நாட்டு மொழிகளில் எல்லாம் மொழி பெயர்க்கப் படுகிறது. தமிழ் மொழிபெயர்ப்பு இதோ வெளியாகிறது. சென்னை மாநில முதியோர் கல்விக் கழகம் இதனைத் தன் முதல் வெளியீடாகத் தமிழுலக முதியோர்க்கு உதவுகிறது. முதியோர்கள் மிகமிக விரும்பி இதனைப் படித்து மேலும் பலநூல்களைத் தொடர்ந்து கற்றுத் தேர்வார்களாக.

மதுரைப் பல்கலைக் கழகம்,
22—2—67

தெ. பொ. மீனாட்சிசுந்தரன்
துணைவேந்தர்

## ACKNOWLEDGEMENTS

—o—

Thanks with acknowledgements are due to Shri. Vasant Nilkanth Gadre, M.A., B.Ed, T.D., of Bombay for he has given rights to translate, print and publish his original work "Deool," Marathi, in Tamil.

N. Dhakshinamoorthi.

# சமர்ப்பணம்

பாவார்ந்த செந்தமிழை வளர்க்கும் பண்பைப்
பறைசாற்றும் பாண்டிவள நாட்டில் நாளும்
ஏரார்ந்த புகழ் மதுரைப் பல்கலைக் கழகம்
இனிதோங்கத் துணை வேந்தனாகி நின்ற
பேரார்ந்த **மீனாட்சி சுந்தர** னென்னும்
பெருந்தகைக்கு மனமுவந்து, பிறங்கு மீந்துப்
பாரார்ந்த மக்களெலாம் பண்பால் ஓங்கப்
பகர் **தேவா லயம** தனைப் படைக்கின் றேனே!

வே. நீ. தட்சிணாமூர்த்தி

# 1

மாலை நேரம். தொழிற்சாலைப் பகுதிக் குடியிருப்புகளில் இருள் தவழ்ந்தது. சாளரங்களின் வழியே புகை வெளிவந்து கொண்டிருந்தது. மங்கலான விளக்கொளி. வழக்கமாகத் தொழிலாளர்கள் தத்தமது வீடுகளுக்கு விரைந்து செல்வார்கள். நாள் முழுமையும் செய்த உழைப்பினுல் ஏற்பட்ட களைப்பும் இளைப்பும் மேலிட்டிருந்தன. ஆனுல் இன்று அவர்களின் முகங்களில் ஒருவகை மகிழ்ச்சிப் புன்னகை இருந்தது. கடைகளில் கூட்டம் நிரம்பி இருந்தது.

ஒரு இல்லத்தில் சிறுவன் நாராயணனும் சிறுமி சீதையும் உணவு உண்டு கொண்டிருந்தனர். தாய் யசோதை அவர்களுக்கு உணவளித்துக் கொண்டிருந்தாள். அவளுக்கு நிம்மதியில்லை. இன்னும் கணவன் வீடு திரும்பவில்லையே யென்று அவளுக்கு மிகவும் வருத்தம். பலவகையான பயங்கரச் சிந்தனைகளும் கற்பனை மிரட்சிகளும் அவள் உள்ளத்தை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தன.

“அம்மா, அப்பா ஏன் இன்னும் திரும்பி வரவில்லை?” என்று கேட்டான் நாராயணன்.

“இன்று அவர் ‘போனஸ்’ வாங்கப் போகிருர். எனக்கு வர்ணப் பொம்மைகள் வாங்கி வரப் போகிருர்!” என்று சீதை புன்னகை பூத்த முகத்துடன் சொன்ணுள்; பொருள்

நிறைந்த பார்வையுடன் தாயைப் பார்த்தாள்.

பேதைத் தாயோ மிகவும் வேதனைப் பட்டுக் கொண்டிருந்தாள். "அவர் இன்று 'போனஸ்' வாங்கவேண்டும். இன்னும் வர வில்லை." "ஒரு வேளை.........குண்டர்களால் தாக்கப்பட்டிருப்பாரா.........வழிப் பறிக்காரர்கள் வழி பறித்துவிட்டார்களோ.........அல்லது........." இவை போன்ற எண்ணற்ற துன்புறுத்தும் சிந்தனைகள் அவளை மேலும் மேலும் கலவரப் படுத்தின.

இரவு உணவு உண்டாயிற்று. குழந்தைகள் சற்று நேரம் படிப்பதிலும், எழுதுவதிலும் கழித்தனர். பிறகு உறங்கச் சென்றனர்.

ஆழ்ந்த இரவு. கடைகளெல்லாம் மூடப் பட்டு விட்டன. வருவோர் போவோர் தொகை குறைந்து கொண்டே வந்தது. யசோதை தனது கணவனின் வருகைக்காக வாயிலில் நின்று காத்துக் கொண்டிருந்தாள்.

பக்கத்துவீட்டு துக்காராமனும், ரங்கம்மா வும் தங்கள் அறையில் உட்கார்ந்திருந்தனர். 'போனஸ்' வாங்கியதைக் கொண்டாடி வேடிக் கையாகப் பேசிச் சிரித்துக் கொண்டிருந்தனர்.

"இதோ பார் ரங்கம்மா, ஞாயிற்றுக்கிழமை ஏதாவது படக் காட்சிக்குப் போகவேண்டும். இந்தப் புதிய சேலையையும் இந்த ஆபரணங் களையும் அணிந்து கொள்ள வேண்டும், சரிதானா?"

"மனப் பூர்வமாக! மிகவும் சந்தோஷம்! இந்த நாளுக்காகத் தானே நான் காத்துக் கொண்டிருந்தேன்!"

இப்பேச்சு யசோதையின் ஆத்திரத்தை மேலும் அதிகப் படுத்தியது. பல விதமான தீய சகுனங்களின் நிழல் அவள் மனத்தை இருளச் செய்தது. சில சமயம் மகாதேவ்னின் பரோபகார குணத்திற்காக அவள் கோபம் கொள்வது வழக்கம். ஆனல் உள்ளத்தின் ஊடே அவள் அவருடைய இரக்க குணத்தை மிகவும் விரும்பினுள். ஆனல் இன்று அவர் மீது அவளுக்கு மிகவும் கோபம். "மற்றவர் களுக் கென்ருல் எப்படியாவது எதையும் செய்து விடுவார். நான் மட்டும் ஏதாவது வாங்கி வரும்படிக் கேட்டால் 'இது உனக்கு அவசியம் தேவைதானு?' என்று கேட்டு விடுவார்!"

துக்காராம் இரவு உணவு உண்டபிறகு வெளியில் செல்வதைப் பார்த்தாள். அவன் நல்ல உடை உடுத்திக் கொண்டிருந்தான். ரங்கம்மா வெளியில் வந்தாள். தன் கூந்தலில் பூ வைத்து அலங்கரித்துக் கொண்டிருந்தாள். அவள் உதட்டில் புன்னகை தவழ்ந்தது. கண் களில் திருப்தி நிறைந்திருந்தது. கதவருகில் யசோதை நிற்பதைக் கண்டாள். திரும்ப வீட்டுக்குள் நுழைந்தாள். பிறகு, கையில் சில பொட்டலங்களுடன் திரும்பி வந்தாள். அவள் தனது அணிகலன்களைப் பெருமித உள்ளத் துடனும் இன்ப உணர்ச்சியுடனும் காட்டினுள்.

நத்து, தோடு, வளையல், காசிப் பட்டுப் புடவை.........யசோதை இவற்றையெல்லாம் பார்த்தாள். ரங்கம்மாவைக் கண்டு பொருமை கொண்டாள். ரங்கம்மா மெதுவாகப் பொட்ட லங்களைக் கையில் எடுத்துக் கொண்டாள். "இன்னும் உன் கணவர் வீடு திரும்ப

வில்லையா? மிகவும் மோசம்! போனஸ் வாங்கிக் கொண்டதுமே வீட்டுக்கு வந்து விட்டார் என் கணவர். மேலும் இவற்றை யெல்லாம் எனக்காக வாங்கிவரவும் அவர் மறக்கவில்லை. நல்ல மனசுக்காரர்!" பிறகு எதையோ நினைத்துக் கொண்ட அவள் கூறி ளுள், "ஓ! சங்கதிசொல்ல மறந்து விட்டேனே! உனக்குத் தெரியுமா? ஆலையில் யாரோ விபத் துக்காளாகி விட்டாராம். அடிபட்டவர் இரண்டு கைகளையும் இழந்து விட்டாராம். என் கணவர் கூறினர். ஐயோ, பாவம்." இவ் வாறு கூறிவிட்டு ரங்கம்மா போய்விட்டாள்.

யசோதை அறைக்குள் வந்தாள். இந்தச் சிந்தனையில் அவள் மிகவும் கலங்கிவிட்டாள். அவள் உள்ளம் குமுறியது. கூப்பிய கரங்க ளுடன் கண்களை மூடியவாறு ஆண்டவன் உருவச் சிலைக்கு எதிரில் அமர்ந்தாள். பிறகு தனது நிம்மதியற்ற உள்ளத்தை மாற்ற லானுள். அறை முழுவதும் சிதறிக் கிடந்த புத்தகங்கள், பலகைகள், பென்சில்கள் ஆகிய வற்றை அடுக்கி வைக்கலானுள். பிறகு நாரா யணனையும் சீதையையும் போர்வையால் நன் ருகப் போர்த்திவிட்டாள். அவர்கள் அருகில் அவளும் படுத்தாள். தனது மகனையும் மகளை யும் பார்த்தாள். வழக்கமான வெறுப்பும், கோபமும் தோன்றின. அவர்களின் கல்விக் கெனச் செய்யும் செலவு வீண் என்று அவள் நினைப்பது வழக்கம். "துக்காராமனின் குழந் தைகளுக்கும் அதே வயதுதான். ஆனால் அவர்கள் பணம் சம்பாதிக்கின்றுர்கள். ஒன்பது வயதுள்ள நாமதேவன் ஒரு செல்வரிடத்தில் வீட்டு வேலைக்காரனுக இருக்கிறுன். ஏழு

வயது கிரிஜா இரண்டு வீடுகளில் பாத்திரம் துலக்கும் வேலை செய்கிறாள். நமது குழந்தைகளோ துன்பத்துக்கும் செலவுக்கும்தான் காரணமாக இருக்கிறார்கள்.'' இவ் வெண்ணங்கள் அவள் உள்ளத்தில் அலைந்தவாறு அவளின் கண்ணிமைகள் மூடின.

கதவைத் தட்டும் ஓசை அவளை எழுப்பியது. "கணவராகத்தான் இருக்கவேண்டும்!'' என்று முணுமுணுத்தவாறே கதவைத் திறந்தாள். திடீரெனத் தோன்றிய எண்ணத்தால் அவள் உள்ளம் குமுறியது. "விபத்துச் செய்தியைக் கொண்டுவரும் ஆளாக இருப்பானோ? விபத்துக்குள்ளானது யார்? எனது கணவராக இருப்பாரோ?'' கதவைத் திறந்ததும் மகாதேவனைப் பார்த்தாள்.........உயர்ந்து, பருத்த, சென்னிற மேனியுடன் மெல்லிய புன்னகை உதடுகளில் விளங்க நின்றார். அவள் உள்ளத்திலிருந்த நிழலெல்லாம் வெளியேறியது. அவளுடைய கோபமும் மறைந்து விட்டது!

அறைக்குள் நுழைந்தவாறே மகாதேவன் யசோதையைப் பார்த்தார். அவள் கோபத்துடன் இருப்பதைப் போலப் பாசாங்கு செய்தாள்.

"என் மீது கோபமா? ஒருபோதும் இருக்காது! உன்னை நன்றாகத் தெரியுமே! பயந்து விட்டாயா? ஆண்டவனிடம் என்னென்னவோ வேண்டிக் கொண்டிருப்பாயே! இது இயல்புதான். இன்று நான் மிகத் தாமதமாகத்தான் வந்தேன். நான் ஒப்புக் கொள்கிறேன். இன்று நான் 'போனஸ்' வாங்க வேண்டுமே! உனக்குச் சிவராமனைத் தெரியும், இல்லையா? அந்தக் கொழுத்த, குள்ளமான ஆள்.........என்

சகோதரனைப் போன்றவன். நடந்ததைச் சொல்ல என்னால் முடியவில்லை.........அவனு டைய கை,.........தோள் இயந்திரத்தில் சிக்கிக் கொண்டது. அவன் வீறிட்டுக் கூச்சலிட லானான். நான், மெயின் சுவிச்சை' நிறுத்திய தால் அவன் பிழைத்தான். ஆனால் அவன் கை இழந்தவனானன். மேலும் சிகிச்சை பெற அவனை மருத்துவ விடுதிக்கு எடுத்துச் செல்ல வேண்டியதாயிற்று. சிவராமனின் மனைவியும், குழந்தைகளும் இந்தச் செய்தியைக் கேட்டு அதிர்ந்து போனார்கள். மருத்துவ இல்லத் துக்கு விரைந்தார்கள். அவர்களுடைய அழு கையால் மருத்துவ இல்லம் முழுமையும் அதிர்ந் தது. அவர்களுக்கு ஆறுதல் கூறினேன். இப் பொழுது சிவராமன் படுக்கையில் இருக்க வேண்டும். மேலும், சில நாட்கள் அவன் ஓய்வு எடுத்தாக வேண்டும். அவனுடைய வேலை யைப் பற்றியோ, நஷ்ட ஈடுபற்றியோ......... அனுகூலமாக எதையும் சொல்வதற்கில்லை. ஆனால், ஒரு கையோடு போயிற்றே என்று ஆண்டவனை வணங்க வேண்டும். அது உயி ருக்கே ஆபத்தாகி விட்டிருக்கும். ஆனால்......... ஒரு ஏழை ஆலைத் தொழிலாளனுக்குத் தனது உயிரைவிடக் கைதான் மிகவும் முக்கிய மானது. அவன் வேலைக்குத் தகுதியில்லை என்று கூறிவிட்டால் அவன் கதி என்ன? ஆலை முதலாளி மீண்டும் அவனை வேலைக்கு அமர்த்த மறுத்துவிட்டால் அவன் எப்படிக் குடும்பத் தைச் சமாளிப்பது? இதனால்தான் 'போனஸ்' வாங்கிவர எனக்கு நேரமில்லை. ஆனால் இரண்டு மூன்று நாட்களில் 'போனஸ்' கிடைத்துவிடும் என்பது நிச்சயம்'' என்று கூறி

ஞர். பிறகு குழந்தைகளின் அருகில் உட் கார்ந்து கொண்டு கேட்டார். "குழந்தைகள் நன்ருகத் தூங்கிவிட்டார்களா?" அவர்களின் நெற்றியில் முத்தமிட்டார். அவ்வாறு முத்த மிடும்பொழுது எதையோ நினைத்துக் கொண் டார், தலையை நிமிர்ந்தார். பாசத்துடன் கூடிய குரலில் கேட்டார். "நீ சாப்பிட்டுவிட் டாயா? இல்லை! நள்ளிரவாகி விட்டதே. வா, வா, நாம் சேர்ந்தே சாப்பிடுவோம்!"

யசோதை அவருடைய அளவு மீறிய கருணை உள்ளத்திற்காகக் கோபங் கொண்ட வளைப் போன்றிருந்தாள். "என் கணவர் முற்றிலும் வாழத் தெரியாதவர். தானுகவே சிவராமனின் விஷயத்தில் வேதனைப் படுத்திக் கொள்கின்ருர். தனது சொந்த நலனை ஒதுக் கிக் கொள்கிருர்!" என்று நினைத்தாள்.

அவர்கள் உணவு உண்ணும்பொழுது ஒரு வரோடு ஒருவர் ஒரு வார்த்தைகூடப் பேசிக் கொள்ளவில்லை!



"என் மீது உனக்குக் கோபமா?"

"இல்லை!"

"பிறகு ஏன் அமைதியாய் இருக்கிறாய்?"

"கவலையால் மிகவும் சோர்ந்து விட்டேன்!"

"உனக்குத் தெரியாதா, யசோதா! சிவராமன் என் சகோதரனைப் போன்றவன்! தன் சகோதரனுக்குச் செய்த இந்தச் சிறிய உதவி பிரமாதமானதா?"

"இதோ பாருங்கள், துக்காராமன் ரங்கம்மாவுக்குக் காசிப்பட்டுப் புடவையும், நகைகளுமாக வாங்கி வந்திருக்கிறார். நான் ஒருத்திதான் பாக்கியமில்லாதவள்."

"நீ ஒரு அப்பாவிப் பிராணி!"

"ஏன் அப்பாவி என்கிறீர்கள்! முட்டாள் என்றுதான் சொல்லுங்களேன். ஏனென்றால், கிடைக்காதது உண்மையில் கிடைக்கும் என்று எதிர்பார்க்கிறேனே. என் கணவர் ஒரு தர்மராஜா என்று நான் தெரிந்து கொள்ளவேண்டும்." இதற்கு மேல் அவள் ஒன்றும் கூறவில்லை. தன் வாதத்தைக் கேட்டு அவள் கணவர் மனம் புண்ணாகி விட்டதென்று நன்கு தெரிந்து கொண்டாள். பிறகு இருவரும் உறங்கச் சென்றனர்.

மூன்று மணி இருக்கும். கொடூரமான உரையாடலால் இரவின் அமைதி சிதைந்தது......மகாதேவன், யசோதையின் இனிய தூக்கம் கலைந்தது. இருவரும் வெளியில் வந்தனர். ரங்கம்மாள் உரத்துக் கூச்சலிட்டு அழுது கொண்டிருந்தாள்........துக்காராமன் காட்டு மிருகம் போன்று அவளை அடித்துக் கொண்

டிருந்தான். அவன் நிரம்பக் குடித்திருந்தான்.........உரத்துக் கூவிக் கொண்டிருந்தான். ஒவ்வொரு வார்த்தைக்கும் அவனுடைய கைகளால் தன் மனைவியை அறைந்து கொண்டிருந்தான்.

"இன்று துக்காராமன் கள் குடித்திருக்கிறான் போலிருக்கிறது!"

"ஐயோ, பேதை ரங்கம்மா! அவளை ஒரு காட்டு மனிதனைப்போல அடித்துக் கொண்டிருக்கிறானே. தயவு செய்து போய் அவளைக் காப்பாற்றுங்களேன்."

"அது கணவன் மனைவிக் குட்பட்ட தனி விஷயம். நான் ஏன் அதில் தலையிட வேண்டும்? மேலும், அதில் குறுக்கிடுவது நல்லதல்ல. யசோதா, உனக்கு நினைவில்லையா? சென்ற முறை அவளுக்கு உதவப் போய், அந்தச் சண்டாளன் என்ன சொன்னான். அவள் மீது ஏதோ கெட்ட எண்ணம் வைத்திருக்கிறேன் என்றானே. கணவனும், மனைவியும் மீண்டும் கூடிக் கொண்டனர். நாம் முட்டாள்களாகி விட்டோம். மகம்மது மியான் மறுபடியும் அவனைத் தவறு செய்யத் தூண்டி யிருக்கிறான் போலிருக்கிறது. மியானின் வலையில் சிக்கிக் கொண்டிருக்கிறான். அந்த மியான் முதல் தர மான கொடியவன் ஆயிற்றே!"

மகாதேவனும், யசோதையும் மீண்டும் படுக்கச் சென்றனர். "இந்த துக்காராமன் எவ்வளவு ஊதாரியாகிவிட்டான்!" யசோதை நினைத்துக் கொண்டாள். "மெலிந்து பலவீனப் பட்டு வரும், குடிகாரன்........! பருத்தி வர்த்தகச் சூதாட்டத்தில் மூழ்கிக் கிடக்கிறான். தனது சிறு குழந்தைகளை மோசஞ்செய்கிறான். அவர்

களின் வருமானத்தை யெல்லாம் சூறையாடு கிறன்! என் கணவர் எளிமையானவர், நேர் மையானவர்........இவர் தெய்வமாயிற்றே!"

# 2

**கா**லை நேரம். சிற்றுண்டி அருந்திய பிறகு மகாதேவன் தொழிற்சாலைக்குப் புறப்பட்டார். நாராயணனும், சீதையும் முத்தமிட்டனர். தமது தேவைகளின் பட்டியலைக் கொடுத்தனர். அவர்கள் கேட்டவற்றை வாங்கி வருவதாக உறுதி யளித்தார். நேராக சிவராமனைப் பார்க்க மருத்துவ நிலையம் சென்றார். சிவராமன் வெறித்து ஆதரவற்ற பார்வையுடன் படுக்கை யில் கிடந்தான். மகாதேவன் ஆறுதல் கூறி ஞர். மகிழ்ச்சியுடன் இருக்குமாறு அறிவுறுத்தி ஞர். "சிவராம், உன்னையே நீ வருத்திக் கொள் ளாதே. நாம் ஏதாவது வழி பார்ப்போம். ஆலை முதலாளியிடமிருந்து உனக்கு உபகாரப் பணம் கிடைக்கும். நாங்கள் எங்களால் முடிந்தவரை முயற்சி செய்கிறோம். ஆனல், அன்புள்ள நண்பா, நீ உன் மனத்தைத் தளர விடாதே. நீயே மனம் விட்டுவிட்டால் உனது மனைவியும், குழந்தைகளும் மிகவும் வேதனைப் படுவார்கள். நிலைமையைத் தைரிய மாகச் சமாளித்துக் கொள்........ஒரு ஆண் மக னைப் போல!"

ஆலைத் தொழிலாளர்கள் கூட்டணி அங்கு இருந்தது. மகாதேவன் தலைவர் பாஸ்கர னுடன் பேசினர். பாஸ்கரன் சக தொழிலாளிக் காகச் செய்யும் கடமைக்காக அவரை வாழ்த்தி

னுர். "நல்லது! நீ உன் கடமையைச் செய் தாய். மிகுதியை என்னிடம் விட்டுவிடு."

மகாதேவன் போனஸ் பெற்றுக் கொண்டு வீடு திரும்பினுர். யசோதைக்குச் சேலையும், குழந்தைகளுக்கு வண்ண வண்ண ஆடைகளும், பொம்மைகளும் வாங்கி வந்தார். குழந்தைகள் அவரைச் சுற்றி நடனமாடின. இன்ப லோகத்தில் இருப்பதுபோல! யசோதையும் மகிழ்வடைந்தாள். ஆனுல், ஒரு நகை கூட வாங்கி வரவில்லை என்பதற்காகத் தனது வெறுப்பை வெளிப்படுத்தவும் மறக்கவில்லை.

"கண்ணே யசோதா, நமது குழந்தைகள் தாம் நமது ஆபரணங்கள். அவர்களுக்காகத் தானே நான் பணம் சேமிக்கிறேன். என் தந்தை ஒரு பெரிய செலவாளியாக இருந்தார். தாய் அன்பை நான் அறியேன். நான் கவனிப் பில்லாத குழந்தையாய் இருந்தேன். ஆண்டவன் அருளால் நாம் இருவரும் ஆரோக்கிய மாக இருக்கிறோம். நாம் நமது குழந்தைகளைப் படிக்க வைப்போம். என் கனவுகளை நன வாக்க உதவி செய். எனக்குத் துணையாய் இரு. பாஸ்கரன் அறிவுறுத்தியபடி போனஸின் மிகுதிப் பணத்தை வளர்ச்சித் திட்டப் பத்திரங் களில் சேமித்திருக்கிறேன். நாராயணனைப் படிக்க வைப்போம். சீதையின் திருமண விழாவை நல்ல முறையில் நடத்த வேண்டும். நெருக்கடி காலங்களில் இந்தச் சேமிப்பு பெரிய உதவியாக இருக்கும். ஏழைதான் பொதுவாக வட்டிக் கடைக்காரர்களுக்குப் பலியாகின்ற வன். நான் கடன் வாங்குவதை நீ விரும்பு வாயா?.........சொல். இப்பொழுதுள்ள சகிப்புத் தன்மையும், தியாகமும் எதிர்காலத்தில் மகிழ்ச்

சியும் இன்பமுமாகும்.........விதை விதைக்காமல் எப்படி அறுவடை செய்ய முடியும்? என்னை நம்பு. கஷ்ட காலங்களில் இந்தச் சேமிப்புப் பெரிய உதவியாக இருக்கும். உனக்குத் தெரியுமா? நமது பாஸ்கரன் நமது சுதந்திர நாட்டைப்பற்றி வியக்கத் தக்க விஷயங்களைச் சொல்கிறர். ஒரு வழியில் நாம் இந்நாட்டின் எதிர்காலத்தை உருவாக்க உதவுகிறேம். நாம் சேமிக்கும் நிதி ஐந்தாண்டுத் திட்டங்களுக்குப் பயன்படுத்தப் படுகிறது. அணைகள் கட்டப் படுகின்றன. புதிய தொழிற்சாலைகள் துவக்கப் படுகின்றன. நமது நாடு உண்மையில் ஒரு பெரிய நாடாக விளங்க வேண்டும். சுய தேவைப் பூர்த்தியுள்ளதாக வேண்டும்......... மேலும்.........”

“இதெல்லாம் எனக்கு ஒன்றும் புரியவில்லை. இவையெல்லாம் எனக்கு எந்த உரிமையும் இல்லை என்பதற்காகச் செய்யும் வழக்கமான சாக்குப் போக்குகள்தாம். இன்னும் சிறு சேமிப்புத் திட்டத்திற்குப் பணம் கட்டுகிறேம். உங்கள் சம்பளத்திலும் பிடிப்புப் பிடிக்கிறீர்கள்.........எனக்குத் தேவை என்றல்தான் முடியாமல் போகிறது.”

# 3

**கா**லம் இருளும், ஒளியுமாகப் பறந்தது. துக்காராமனின் குடிப் பழக்கமும் அதிகரித்து விட்டது. அவன் இரவில் நெடு நேரம் கழித்து வருவது வழக்கமாகி விட்டது. நாள்தோறும் வேதனைக் காட்சிகள்தாம். ரங்கம்மாவின்

அழுகுரல் கிராமத்துச் சுவர்களுக்கும் பழக்க மானதாகிவிட்டது. செந்நிறச் சாராயம் ரங்கம் மாவின் ஆபரணங்களை யெல்லாம் சுழற்றி யடித் துச் சென்று விட்டது. காசிப்பட்டுப் புடவை யும், பாத்திரங்களும் கூட மிச்சமில்லை. துக்கா ராமன் மதிப் பிழந்தான். மன அமைதியையும் இழந்தான். முகம்மது மியான் அவனுடைய சக தொழிலாளி. அவனே அங்கு இல்லை யென் ருல் துக்காராமனின் வேலை போய்விட்டிருக்கும். முகம்மது மியானும், இளைஞரான ஆலை முத லாளியும் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த னர். இது துக்காராமனுக்குத் தெரியும். முத லாளிக்கு மதுவும், மங்கையும் என்ருல் மிகவும் நாட்டம். மியானும் குடிப் பழக்கத்தில் இருந் தான். ஒரு முறை துக்காராமனிடம் பணம் இல்லை. சில்லறை வருமானமும் தேவையான சாமான்களை வாங்கச் செலவாகிவிட்டது. அவ னிடம் ஒரு காசும் இல்லை. எனவே, மியானிடம் வந்து கடன் கேட்டான்.

"உனக்கு நான் ஏன் பணம் கடன் தர வேண்டும்?" என்று மியான் கூறினுன்.

"அடுத்த மாதம் பதினென்ரும் தேதி கொடுத்து விடுகிறேன்! தயவு செய். எனக்கு மிகவும் தாகமாக இருக்கிறது!"

"மிகவும் சரி, வா........ நீயும் எனது தாராள குணத்தை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்." என்று மியான் கூறினுன்.

மியான் எதிர் பார்த்தது போலவே இது போன்ற வேண்டுகோள்கள் அதிகமாய்க் கொண்டு வந்தன. சாராய வேட்கையைத் தீர்க்க துக்காராமன் மீண்டும் முகம்மது மியா னிடம் சென்ருன்.

“ வா, நண்பா!”

“ எனக்குச் சாராயம் வாங்கப் பணம் தேவை!”

“ துக்காராமா, உனக்கு நான் பலமுறை கடன் கொடுத்திருக்கிறேன். ஆனால், இது நல்ல தல்ல. நீ ஏன் இதைப்போல செய்யக் கூடாது?.........ஓ! இல்லை! உனக்கு என்மீது கோபம் வந்துவிடும்!”

“ இல்லை, இல்லை! எனக்குக் கோபம் வராது! என்ன செய்ய வேண்டும் என்று சொல்.” வேட்கை மிகுந்த துக்காராமன் மீண் டும் கெஞ்சினான்.

“ இல்லை. உனக்குப் பிடிக்காதது என்று எனக்கு நிச்சயம் தெரியும்!”

“ ஏன் என் பொறுமைமையைச் சோதிக் கிறாய்?”

“ மிகவும் சரி! பிறகு கேள்.........நீ கேட்ப தனால் சொல்கிறேன்! நமது ஆலை முதலாளி பெண்கள் பித்தர். அவர் ஒவ்வொரு முறையும் புதிய இளங் கன்னிகளாக வேண்டும் என்று ஆசைப் படுகிறார்..............உன் மகள்.............. கிரிஜா..............”

“வெட்கமில்லாத அயோக்கியா! மூடு வாயை! இல்லாவிட்டால் ......... உன் நாவை அறுத்துவிடுவேன்! நான் குடிகாரன்தான். சந்தேகமில்லை ......... ஆனால் ......... அவ்வளவு கீழ்த்தரமானவன் என்று நினைத்துவிடாதே!”

“நான் ஏற்கனவே.........”

“நாவை அடக்கு, நீசனே!” என்று கூறி யவாறே மியானின் விடுதியை விட்டு வீடு திரும்பினான்.

அறையில் ஆழ்ந்த அமைதி நிலவியது. சூழ்நிலை சோகமயமாயும், இருண்டும் இருந்தது. நாம தேவன் படுக்கையில் கிடந்தான். கிரிஜா அவன் அருகில் குழப்பத்துடன் உட்கார்ந் திருந்தாள். ரங்கம்மா அவனுடைய கால்களைத் தேய்த்துக் கொண்டிருந்தாள்.

"நாமதேவனுக்கு என்ன உடம்பு?" என்று கவலைக் குரலுடன் கேட்டான் துக்காராமன்.

"அவன் மிகவும் மோசமான நிலைமையில் இருக்கிறான். கடவுளுக்குத் தான் தெரியும் அவனுக்கு என்னவென்று. நீங்கள் நேரத்தில் வந்துவிட்டீர்களே அதுவே பாக்கியம் தான்."

நாமதேவனின் நிலைமை நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டே வந்தது. எட்டு நாட்கள் வரையிலும் ரங்கம்மா, கிரிஜா, துக்கா ராமன் இரவும், பகலுமாக அவனுக்குச் சிகிச்சை செய்து வந்தனர். ஆலையில் துக்காராமனால் தனது வேலையில் கவனம் செலுத்த முடிய வில்லை. வீட்டுக்குச் சென்று நோய்வாய்ப் பட்ட மகனைப் பார்க்க மனம் துடித்துக் கொண் டிருப்பது வழக்கம்.

ஆனால், ஒரு நாள் அவன் வீடு திரும்பிய பொழுது நாமதேவன் சுய நினைவின்றி இருந் தான். சவத்தைப் போன்று வெளிறிப்போய் படுக்கையில் கிடந்ததைக் கண்டான். துக்கா ராமனுக்குப் பொறுக்க முடியவில்லை. இந்த எட்டு நீண்ட நாட்களும் குடியிலிருந்து அவன் மீண்டிருந்தான். இப்பொழுது, இந்த பயங்கர வேதனையில் தனக்குள் சொல்லிக் கொண் டான்........"எங்கிருந்து இந்தக் கேடு வந்தது? நான் அப்படிப்பட்ட துர்ப்பாக்கியமான, துர

திருஷ்டசாலியா?" அவன் மன வேதனை யுற்றவனுனுன். எழுந்திருந்தான். மருந்துக் காக வைத்திருந்த பணத்தை எடுத்துக் கொண்டான். அறையைவிட்டு வெளியில் சென்றுன். நிறை குடியுடன் வீடு திரும்பினுன். கால்கள் தடுமாறின. பேச்சு குளறியது. அப் பொழுது தான் நாமதேவன் மயக்கத்திலிருந்து தெளிந்தான். பாதி கண்கள் மூடியவாறே "தண்ணீர், தண்ணீர் வேண்டும்!" என்று கேட்டான். ரங்கம்மா அவனுடைய வாய்க் குள் சிறு கரண்டியால் நீரை ஊட்டினுள். துக்காராமன் நாமதேவன் அருகில் சென்று போர்வையை இழுத்தான். ரங்கம்மாவை அடிக்கத் தொடங்கினுன். இழுப்புவலி வந்த வனைப் போன்று நாமதேவன் எழுந்தான். கிரிஜாவுக்கு ஒன்றும் விளங்கவில்லை. "அப்பா, அப்பா, அம்மாவை வதை செய்யாதே!" என்று நாமதேவன் நினைவிழந்து அரற்றிய வாறே கூவினுன். அவன் உடல் முழுதும் காற்றில் அகப்பட்ட இலைச் சருகைப் போல் அதிர்ந்தது. அவனுல் நிலையாக நிற்க முடிய வில்லை. விழுந்து உயிர் துறந்தான்! இறந்தே போனுன், மீளவும் எழுந்திருக்காத நிலையில். மரணப்படுக்கை அவனைச் சுற்றிலும் தன் வெண்கரத்தால் தழுவியது. தெரியாத ஒரு வகைச் சக்தி மின்சாரம் போல் ரங்கம்மாவை உந்தியது. அவள் துக்காராமனை வெளியில் தள்ளினுள். கிரிஜா வீட்டை விட்டு வெளியில் விரைந்து மகாதேவனைக் கூவி அழைத்தாள். அவர் விரைந்தோடி வந்தார். பலத்த ஓசை யுடன் ஓங்கி ஒரு அறை துக்காராமனை அறைந் தார்.

"ஏய், இதயமில்லாத மிருகமே! உன் பேதைக் குழந்தை இறந்து கிடப்பதைப் பார்க்கவில்லையா! ஆதரவற்ற உன் மனைவியிடம் உன் வல்லமையைக் காட்ட இதுதானா சமயம்? நீ மனிதனா, பிசாசா?" துக்காராமனுக்குத் தன் நினைவு திரும்பியது!

மதுவின் பிடியில் துக்காராமன் சிக்கிக் கொண்டான். அவன் நாமதேவனை இழந்தான். பணத்தை இழந்தான். அவனிடம் இருந்தனவெல்லாம் தொலைந்தன. தான் செய்தது தவறு என்று அவனுடைய உள்ளத்தின் ஊடே நன்கு அறிந்திருந்தான். ஆனால், தன்னைத் திருத்திக்கொள்ள அவனால் இயலவில்லை. நாமதேவன் இறந்து பன்னிரண்டு நாட்கள் ஆகிவிட்டன. அவனிடம் ஒரு காசும் இல்லை. ஆனால், சிறிதளவேனும் குடிக்க வேண்டும் என்ற ஆசை மிகுந்தவனானான். அவ்வாறு பெறுவதற்கு வழி தெரியாமல் விழித்தான். குழந்தை இறந்ததிலிருந்து ரங்கம்மா ஒரு வார்த்தை கூடப் பேசுவதில்லை. கிரிஜா வீட்டு வேலைகளைச் செய்து கொண்டிருந்தாள். துக்காராமன் அவளை உற்று நோக்கினான். இளமை அவளுடைய தோற்றத்திற்குத் தெய்வீகப் பொலிவு அளித்தது. எழில் மிகுந்த தோற்றம். அழகிய உடலமைப்பு. சிறந்த கட்டமைப்பு. ஒளி பொருந்திய கண்கள்......துக்காராமன் அக்கணமே எழுந்திருந்தான். அறையை விட்டு வெளியில் ஓடினான். மகம்மது மியானிடம் சென்று கொண்டிருந்தான். அந்தக் கணத்தில் அவனுக்கு மது,........ மது.........மதுவைத் தவிர வேறு எதுவும் தோன்றவில்லை.

# 4

சீதையின் திருமணம் நிச்சயமாயிற்று. நாராயணன் உயர்தரக் கல்வி முடித்திருந்தான். இயந்திரத் தொழிலில் தொழில் நுட்பக் கல்வியை முடிக்கும் நிலையில் இருந்தான். சில மாதப் பயிற்சி வேலைக்குப்பின் மகாதேவனுடைய ஆலையில் அவனுக்கு நல்ல வேலை கிடைக்கும் என்றும் சொல்லப்பட்டது.

இப்பொழுது நாராயணன் இருபத்திரண்டு வயதான ஆரோக்கியமான வாலிபன். வீட்டிலிருக்கும்பொழுது புத்தகம் படிப்பதிலும் கிரிஜாவுடன் வேடிக்கை பேசுவதிலும் பொழுது போக்குவான். அவன் வேடிக்கை பேசுவதில் உற்சாகம் மிகுந்தவன். கிரிஜா அவனுடைய அறைக்கு அடிக்கடி செல்வாள். நாராயணன் அவள் மீது காதல் கொண்டான். இருவரும் இவ்வுணர்ச்சியையும் கவர்ச்சியையும், அறிந்திருந்தனர். இது யசோதைக்கும் மகாதேவனுக்கும் தெரியாததல்ல. கிரிஜாவுடன் இருப்பதனல், நாராயணன் காலம் எவ்வளவு விரைந்து செல்கிறதென்பதைக் கவனிக்கவில்லை.

மகாதேவன் கிரிஜாவின் எதிர்காலத்தைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருந்தார். ஒரு நாள் மாலை யசோதையும் மகாதேவனும் பேசிக் கொண்டிருந்தனர். அவர் கூறினர்,

"யசோதா, கிரிஜாவின் எதிர்காலத்தைப் பற்றிதான் நான் மிகவும் கவலைப்பட்டுக்கொண்டிருக்கிறேன். மகம்மது மியானும் துக்காராமனும் ஏதோ பயங்கரத் திட்டம் போட்டு வரு

கின்றனர். நம்பத்தகுந்த இடத்திலிருந்து நானே கேட்டேன். நாராயணனுக்கு கிரிஜா மீதுள்ள அன்பும் எனக்குத் தெரியும். ஆனால் அவளை நாராயணனுக்குக் கேட்டால் துக்காராமன் கட்டாயம் மறுத்துவிடுவான். நீ ஏன் இதைப்பற்றி ரங்கம்மாவிடம் கலந்து பேசக் கூடாது?''

"ஓ, தெய்வமே! என் மனத்தில் இருப்பதைத் தெரிந்து கொண்ட மாதிரி சொல்கிறீர்களே! இதைச் சொல்லலாம் என்றால் எனக்குத் தைரியம் இல்லை. இப்பொழுது இந்த யோசனையை நீங்கள் ஒப்புக் கொண்டீர்கள். எனவே நிச்சயம் நான் ரங்கம்மாவைப் பார்த்துப் பேசுகிறேன். அதை என்னிடம் ஒப்படைத்து விடுங்கள்.''

மகாதேவன் சிவராமனை மிகவும் இரக்கத்துடன் கவனித்துக் கொண்டார். வாய்ப்பு ஏற்படும் பொழுதெல்லாம் சிவராமனைப் போய்ப் பார்த்துவிட்டு வருவார். சிவராமனின் மனைவி ஊக்கமும், உற்சாகமும் மிகுந்தவள். சிபாரிசு மூலம் அவளுக்கு ஆலையில் ஒரு வேலை கிடைத்தது.

சிவராமன் மிகவும் கவலையுடன் இருந்தான். அவன் உள்ளத்தில் உள்ள எண்ணத்தைப் போக்க அவனால் முடியவில்லை. தனக்கு ஒரு கை இல்லையே என்ற எண்ணம்தான். தான் வீட்டில் உட்கார்ந்திருக்கத் தனது மனைவி வேலை செய்வதை நினைத்தான். தான் பயனற்றவன் எனவும் இந்த நிலை பரிதாபமானது என்றும் எண்ணினான். ஆண்மையுள்ளமும் உடலும் ஆதரவுக்குரிய நிறைவைத் தருகின்றன. மனைவியின் சம்பாதனையில்

பிழைப்பது அவனுடைய வாழ்க்கையில் இழி வான நோக்கமாகப் பட்டது. கொடிக்கு ஆதர வாக மரம் இருக்க வேண்டும். அவள் வாழ்வை வளப்படுத்தவேண்டும். ஆனல் அவன் விஷ யத்தில் முற்றிலும் மாறுபட்டிருந்தது. அவன், தான் ஒரு தகுதியற்றவன், பயனற்றவன், ஆதரவற்றவன் என்று நினைத்தான். அவ னுக்கு வாழ்க்கை பொருளற்ற கொடுந் தண் டனையாக இருந்தது. எனவே, அவன் பல முறை இதை ஒழித்துவிட வேண்டும் என்று விரும்பினன்.

சிவராமனுக்கு ஏதாவது ஒரு வழி செய்ய மகாதேவன் தன்னல் இயன்றவரை முயன்ருர். அவன் நிறை உள்ளத்துடன் இல்லையென்பதை மகாதேவன் நன்கு அறிவார். ஆனல் ஒரு நாள் மாலை மகாதேவன் வழி கண்டு பிடித்து விட்டார். வீடு திரும்பி வந்தார். அவர் உவகை யுடன் இருந்தார்.

# 5

மகாதேவன், நாராயணன், சீதை, யசோதை ஆகியோர் இரவு உணவு உண் டனர். பிறகு எண்ணெய் விளக்கைச் சுற்றி லும் அமர்ந்து பேசி மகிழ்ந்து கொண்டிருந் தனர். சிவராமனின் எதிர் காலத்தைப் பற்றித் தான் செய்த முயற்சிகளைப் பற்றி மகாதேவன் விளக்கிக் கொண்டிருந்தார். திடீரென்று...

"காப்பற்றுங்கள்! காப்பாற்றுங்கள்! இந்தக் காட்டுப் பிராணியிடமிருந்து கிரிஜாவைக் காப்பாற்றுங்கள். பிசாசே, என் நகைகளை யெல்லாம் பறித்துக் கொண்டாய். வீட்டுச்

சாமான்களையும் பாத்திரங்களையும் விற்றுத் தொலைத்தாய். என் மகனைக் கொன்ருய்........ இப்பொழுது என் மகளை விற்கப் பார்க்கிருயா. சாராயம், சாராயம், சாராயம்! சாராயத்தைத் தவிர இந்த மிருகத்துக்கு வேறு எதுவுமே பிடிக்காதா! உனக்கு விருப்பம் எங்கேயோ அங்கே போய்த்தொலை. சேற்றிலோ புழுதியிலோ போய் விழு. ஆனல் என் மகள் மீது கை வைக்காதே! அம்மா! முடியாது, முடியாது, முடியாது! இவளைப் பிரிய விடமாட்டேன்!" ரங்கம்மாவின் இந்தக் கூச்சல் பக்கத்து அறையிலிருந்து கேட்டது.

"தூரப்போ, சொல்வதைக் கேட்கமாட்டாய்!" இது சாராய நாற்றத்துடன் கூடிய துக்காராமனின் உரத்த குரல்.

ரங்கம்மா விரைந்து உள்ளே வந்தாள். "அண்ணு, நாராயணு, என் கிரிஜாவைக் காப்பாற்றுங்கள்! அவளுடைய அப்பன் அவளைச் சாராயத்துக்கு விற்கிருராம்!"

துக்காராமன் அறைக்கு மகாதேவன் விரைந்தார். நாராயணன் சட்டை போட்டுக் கொண்டு விரைந்து சென்ருன். மகாதேவன் அறைக்குள் நுழையும் பொழுது மியான் கிரிஜாவின் கையைப் பற்றி இழுப்பதைக் கண்டார். மியான் அறையை விட்டு வெளியில் கொண்டு வர முயன்று கொண்டிருந்தான். "நான் உன் தந்தையிடமிருந்து உன்னை விலைக்கு வாங்கி விட்டேன். அவனுக்கு நூறு ரூபாய் ரொக்கம் கொடுத்திருக்கிறேன். அத்துடன் சாராயம் வேறு கொடுத்திருக்கிறேன்! இப்பொழுது இப்படி தடுத்து என்ன பயன்?" அவனும் தன் சுய நினைவில் இல்லை.



துக்காராமன் தன் கையில் ஒரு சீசா வைத்திருந்தான். அவன் தள்ளாடிக் கொண்டிருந்தான். அவன் தான் செய்வது என்னவென்று அறியாமல் இருந்தான். இந்தப் பெரியவரோடு நீ போகத் தான் வேண்டும். இப்பொழுது நீ அவருடைய உடைமை. நான் உன் தகப்பன். என் உத்தரவுக்குக் கீழ்ப்படிய வேண்டும். மியான் பாய், அவளை அழைத்துக் கொண்டு போ! ஏன் தாமதிக்கிருய்?”

மகாதேவன் மியானை மோதினுர். அவன் பிடியிலிருந்து கிரிஜாவை விடுவித்தார். ரங்கம்மாவும் யசோதையும் காத்துக் கொண்டிருந்த அறைக்கு போகுமாறு கூறினுர். மக்ம்மது மியான் போதையில் வீரமாக உரத்துச் சொன்னுன். “இந்தப் பெண்ணே ஒரு அழகு, அவள் இல்லாமல் போகமாட்

டேன். எனக்குத் துக்காராமனிடம் ஒரு ஒப்பந்தம். ஒப்பந்த நிபந்தனை பைசலாகி விட்டது. அவளுடைய விலையைக் கொடுத்து விட்டேன். அவனுக்குச் சாராயம் வேறு கொடுத்திருக்கிறேன். இப்பொழுது கிரிஜா என்னுடையவள். மாகதேவன் துக்காராம னின் கையில் இருந்த சீசாவைப் பிடுங்கி எறிந் தார். அவன் முகத்தில் ஓங்கி அறைந்தார். அதனுல், துக்காராமன் மயங்கி விழுந்தான். மியான் மீளவும் கூச்சலிடத் தொடங்கினுன். "ஏய், ஏய், வீரா, ஏன் உன் பலத்தை அவசிய மில்லாமல் காட்டுகிருய்? இந்த அழகியை நான் விலைக்கு வாங்கிவிட்டேன். அவளுக்கு வேண்டியதெல்லாம் நான் வாங்கித் தருகி றேன். ராணியைப் போல அவள் சந்தோஷ மாய் இருப்பாள்! இது என் தொழில். அவளை அழைத்துச் செல்ல விடுங்கள். இவளைப் போன்ற பல அழகிகள் என்னிடம் இருக் கிருர்கள். உனக்கு ஒன்று வேண்டுமா? என் மேல் கோபப்படாதே!"

மகாதேவன் அவன் கன்னத்தில் ஓங்கி அறைய விரும்பினுர். இழிவான சொற்களைக் கூறிய அவன் நாவைத் துண்டிக்கக் கருதினுர். ஆனுல், சற்று நேரத்தில் இரண்டு போலீஸ் காரர்களும் ஒரு போலீஸ் அதிகாரியும் அறைக் குள் நுழைந்தனர். மியானுடைய வீரத்தனம் மறைந்தது. தப்பித்துக்கொள்ள முயன்ருன். ஆனுல் போலீஸ் அதிகாரி முன்வந்து விலங் கிட்டார். அதிகாரி உரத்துச் சொன்னுர், "மியான், நகரம் நகரமாக நான் உன்னைத் தேடிக் கொண்டிருக்கிறேன். உனக்கு அழகி தேவை, அல்லவா? போலீஸ் ஸ்டேஷனுக்கு

வா, அங்கே கிடைக்கும் ஒன்று." போலீஸ் காரர்கள் துக்காராமனைப் பிடித்துக் கொண்டனர் அவர்களுடன் போலீஸ்காரர்கள் வெளியில் வந்தனர். வழியில் கிரிஜா வந்தாள். "போலீஸ் ஐயா, தயவுசெய்து என் தந்தையை விட்டு விடுங்கள்! அவர் என் அப்பா! என் மீது கருணை காட்டி அவரை விட்டு விடுங்கள்!" ரங்கம்மா அவளை அழைத்துச் சென்றாள். அவளைத் தழுவி, மார்போடு அணைத்துக் கொண்டாள். விக்கி அழுவதைச் சமாளித்துக் கொள்ள முயன்றாள். உள்ளத்திலிருந்து குமுறும் கண்ணீரை அடக்கமுயன்றாள்.

நிலைமையைச் சமாளிக்கப் போலீஸை அழைத்து வந்தது நாராயணன்தான்.

மகாதேவன் துக்காராமனை மீட்கத் தன்னால் இயன்றவரை முயன்றார். ஆனால் அனைத்தும் பயனற்றுப் போய்விட்டன. துக்காராமன் ஆறு மாதம் சிறை வாசம் இருக்க வேண்டியதாயிற்று. மகம்மது மியான் மீது பல குற்றங்கள் இருந்தன. அவன் குற்றவாளி என்று நிரூபிக்கப்பட்டான். எனவே அவன் ஏழு ஆண்டுகள் கடுங்காவல் தண்டனை அனுபவிக்க வேண்டியதாயிற்று!

# 6

**பா**ஸ்கரனைக் கலந்தாலோசித்த பிறகு, மகாதேவன் ஸ்தாபனத்தின் தலைவரைக் கண்டு பேசினார். ஸ்தாபனம் அவனுக்குச் செயற்கைக் கை கொடுத்தது. சிவராமனுக்கு அச் செயற்கைக் கரத்தைக் கொண்டு வந்தார்.

கொஞ்ச காலத்திலேயே சிவராமனுக்கு அதைப் போட்டுப் பழகி விட்டது. பாஸ்கரன் சிவராமனுக்காக ஆலே முதலாளியிடம் பேச்சு வார்த்தை நடத்தினர். அதன் விளைவாக அவர் சிவராமனை வாயில் காவலனுக வேலைக்கு அமர்த்த உறுதியளித்தார்.

இந்தச் செய்தியுடன் மகாதேவன் சிவராமனிடம் சென்றார். தன்னுடன் இனிப்புப் பண்டங்களையும் கொண்டு செல்ல மறக்கவில்லை. இந்தச் செய்தியைக் கேட்டுச் சிவராமன் மிக்க மகிழ்ச்சி யடைந்தான். தனது பெருமகிழ்ச்சியையும் நன்றியையும் வெளிப்படுத்த அவனுக்கு வார்த்தைகள் கிடைக்கவில்லை. மகாதேவனைக் கட்டித் தழுவிக் கொண்டு தழு



தழுத்த குரலில் கூறினன். "மகாதேவா, நீ தான் தெய்வம். நாம் ரத்த சம்பந்தம் உள்ளவர்களில்லை. இதில் தன்னலம் ஏதும் இல்லை.

இருப்பினும் நீ என்னை மரண வேதனையி லிருந்து மீள உதவி செய்தாய். உண்மையில் நீ ஒரு தெய்வம்தான்!" அவன் மனைவியும் மகிழ்ச்சி யடைந்தாள். "மாமா, எனக்கு மிட்டாய் கொடு, எனக்கு மிட்டாய் கொடு," என்று அவனுடைய குழந்தைகள் ஆரவார மிட்டன.

துக்காராமன் சிறையிலிருந்தான். அதனால் ரங்கம்மாவும் கிரிஜாவும் காலியாய்க் கிடந்த அறையில் நிம்மதி யற்றிருந்தனர். திருப்தி யற்றிருந்தனர். மகாதேவன் அருகில் உள்ள இடத்தில் தங்குவதற்கு ஒரு இடத்தை வாட கைக்கு எடுத்தார். ரங்கம்மாவுக்கு ஒரு சிறு காய் கறிக்கடை திறக்க உதவி புரிந்தார். ரங்கம்மாவும் கிரிஜாவும் காலத்தைத் தள்ள வழி வகுத்துக் கொண்டனர். அவர்கள் தங்கள் வாழ்க்கைத் தேவையைப் பெற முடிந்தது.

கிரிஜாவின் திருமணத்தைத் தள்ளிப் போடுவது நல்லதல்ல. அவளை வீட்டில் தனி யாக வைத்திருப்பது நல்லதல்ல என்று ரங்கம் மாள் நினைத்தாள். விரைவிலேயே அவள் திருமணத்தை முடித்துவிட ஆவலாயிருந் தாள். ஒரு நாள் ரங்கம்மா யசோதையுடன் கூறினாள். "கிரிஜாவை மருமகளாக்கி விட் டால் நான் எல்லாத் துன்பத்திலிருந்தும் மீண்டுவிடுவேன். ஆனால் இவள் தந்தையோ இந்தப் பகுதியிலும் கிராமத்திலும் பெயர் போன முரடராகிவிட்டார். இவர் குடும்பத் தோடு உறவு கொள்ள யாருமே விரும்ப மாட் டார்களே. தந்தை செய்த பாவம் பேதைக் குழந்தையையும் வாட்டுகிறது!"

"என் நாராயணன் இருக்கிறன். இவர்கள் எவ்வளவு அழகான தம்பதிகளாக இருப்பார்கள்! இருவரும் ஒருவரை ஒருவர் நேசிக்கிறார்கள். இந்த சம்பந்தம் உனக்கு விரும்பம்தானு? பதினைந்து நாளுக்கு முன்பு தான் உனது மைத்துனர் இதைப்பற்றி என்னைக் கேட்கச் சொன்னுர்."

"இதைவிட வேறு எதைத்தான் ஒருவர் எதிர்பார்க்க முடியும்?"

"அப்பொழுது ஏற்பாடு ஆனது போல் தான்!"

துக்காராமன் விடுதலையான பிறகுதான் மண விழாவை நடத்த வேண்டும் என்று மகாதேவன் நினைத்திருந்தார். ஆனுல் ரங்கம்மா இதைப் பிடிவாதமாக மறுத்தாள். "வேண்டாம்! வேண்டாம்! அந்தக் குடிகாரர் ஏதாவது விஷமம் செய்து பெருங்கேட்டை விளைவித்து விடுவார்!" இவ்வாறு அவர் விடுதலைக்கு முன்னரே திருமணத்தை நடத்தி விட அவள் அடிக்கடி வலியுறுத்தி வந்தாள்.

நாராயணன், கிரிஜா இவர்களின் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. சிவராமன் குடும்பத்துடன் திருமணத்துக்கு வந்திருந்தான். கூட்டணித் தலைவர்கள், சக தொழிலாளர்கள், நண்பர்கள் அனைவரும் ஆர்வத்துடன் பங்கெடுத்துக் கொண்டனர். ஒரு நீண்ட ஊர்வலம் நடைபெற்றது. நாதசுர இசையும், மேள ஓசையும் நீல வானில் எதிரொலித்தன. விளக்குகள் இன்பமயமாய் ஒளி வீசின. மகாதேவன் நாராயணனுக்குக் குறிப்பாக அறிவுறுத்தினுர். "மணவிழா முடிந்த

பிறகு நேராகத் துக்காராமனிடம் சென்று வணக்கங்களைத் தெரிவித்துவிட்டு வாருங்கள்!"

எனவே, திருமண ஆடைகளையோ, அணிகலன்களையோ கழற்ருமல் துக்காராமன் பாதங்களை வணங்கச் சிறைக்குச் சென்றனர்.

சிறையிலிருந்து விடுதலை பெற இரண்டு நாட்களே இருந்தன. கடந்த ஆறுமாதமாகத் தன்னைக் கட்டுப் படுத்திக் கொள்ள துக்காராமன் பயிற்சி பெற்றுவிட்டான். வேறு மாற்றம் ஏதும் இல்லை. சிறையில் ஒரு துளி மது வாகிலும் கிடைப்பது அரிது. தொடக்கத்தில் அவனுக்கு நிம்மதி யில்லை. சிரமம் மிகுந்தவனுஞன். வெறி பிடித்தவனைப்போல இருந்தான். ஆனல் காலம் செல்லச் செல்ல அவர் தனது மனத்தைக் கட்டுப் படுத்தத் தொடங்கினுன். தன் கொடிய முரட்டுச் செயல்களுக்கு வருந்தினுன். கண்களில் நீர் தளும்பத் தலையில் அடித்துக் கொள்வான். "நான் மனிதப் பிறவியே இல்லை. அரக்கன். நான் கிரிஜாவின் தந்தையில்லை. அவளுடைய மோசமான எதிரி நான்! அன்புள்ள மனைவியைக் கடவுள் எனக்கு அளித்தார். பச்சிளங் குழந்தைகளை அளித்தார். ஆனல் எனது பாவச் செயல்களால், நானே என்னை இழிவுபடுத்திக் கொண்டதால், அவர்களின் பெருமையை நான் உணரவில்லை. அவர்களுக்கு ஒரு கணநேர மகிழ்ச்சி கூட நான் தரவில்லை."

ஒரு முறை இது போன்ற எண்ணத்தில் தன்னை மறந்திருந்தான். அப்பொழுது ஒரு போலீஸ்காரன் வந்து சொன்னுன். "வெளி

யில் சிலர் பார்க்க வந்திருக்கின்றனர். அவர்கள் உன்னைப் பார்க்க விரும்புகின்றனர்." "என்னைப் பார்க்க விரும்புகிறார்களா!" என்று துக்காராமன் சொல்லிக் கொண்டான். "யாராக இருக்கலாம்?" என்று வெளியில் வந்தான்.

சிறையில் தனியறை ஒன்று இருப்பது வழக்கம். சிறைக் கைதிகளைப் பார்க்க வருபவர்களுக்கு அது பயன்படும். அவ் வறையில் துக்காராமன் நுழைந்தான். அங்கு நாராயணனையும் கிரிஜாவையும் மணமகன், மணமகள்



கோலத்தில் இருக்கக் கண்டான். அவன் விஷயத்தை உணர்ந்து கொண்டான்! அவமானமடைந்தான். தன் மகளிடம் முகத்தைக் காட்டுவதை விட 'பூமாதா' தன்னை விழுங்கி விட்டால் மிக நன்றாக இருக்கும் என்று நினைத்தான். நாராயணனும் கிரிஜாவும் குனிந்து அவன் பாதங்களைத் தொட்டு வணங்கினர்.

துக்காராமனுக்கு அழுவதா சிரிப்பதா என்று தெரியவில்லை. கிரிஜாவின் கரங்களை மென்மையாகப் பிடித்தான். அவளுடைய தலையைத் தனது வருந்தும் மார்பில் தழுவிக் கொண்டான். தழுதழுத்த குரலில் கூறினான். "குழந்தை, நீங்கள் இருவரும் மகிழ்ச்சியாய் வாழுங்கள் ........ உனது பெருமைக்குரிய கணவனுடன் சண்டை போடாதே. குழந்தை, கண்ணே, கண்ணே, கிரிஜா.........இந்த அயோக்கியனை மன்னிப்பாயா? உனக்கு ஏற்ற தந்தையில்லை நான். என்னை மன்னித்துவிடு. இதுவரை இளகிய உள்ளத்தைக் கட்டுப்படுத்தி வந்தாள் மகள். அவளுடைய வெளிறிய கண்களிலிருந்து 'பொல பொல' வென்று கண்ணீர் சிந்தியது.

துக்காராமன் தனது சிறைக்குத் திரும்பிச் சென்றான். "இப்படிப்பட்ட எனது மகளை நான் விற்கும் நோக்கத்தோடிருந்தேன். அடியோடு அவளுடைய இன்பத்தைப் பாழாக்க இருந்தேன். ஐயோ! முட்டாளே, மிருகமே ........துக்காராமா, ஆண்டவனிடம் எப்படி நீ மன்னிப்பு கேட்பாயடா?"

துக்காராமனின் சிறைக் காலம் முடிந்து விட்டது. சிறையை விட்டு வெளியில் வந்தான். சிறை வாயிலில் ரங்கம்மா, கிரிஜா, யசோதை, நாராயணன், மகாதேவன் ஆகியோர் அவனை வரவேற்றார்கள். துக்காராமனுக்குத் தன் முகத்தை எப்படி, எங்கே மறைத்துக் கொள்வது என்று தெரியவில்லை!

அனைவரும் வீடு திரும்பினர். ரங்கம்மா மிகவும் மகிழ்ச்சியோடிருந்தாள். கிரிஜா தனது கூத்தாடும் உள்ளத்தைக் கட்டுப்படுத்த முடிய

வில்லை. அந்த நாள் ஆனந்தத் திருநாளாக இருந்தது. இரவு நெடுநேரம் வரையில் அனைவரும் கூடியிருந்தனர். துக்காராமன் எதுவுமே பேசாமல் இருந்ததை மகாதேவன் கவனித்தார். ஆயினும், துக்காராமனின் வருந்திய உள்ளத்தை மாற்றப் பல வகையான விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்.

துக்காராமன் படுத்து விட்டான். அவனுக்கு ரங்கம்மாவிடம் பேசுவதற்கு தைரியம் இல்லை. ரங்கம்மாவும் விரைவில் ஆழ்ந்து உறங்கிவிட்டாள். துக்காராமன் படுக்கையை விட்டெழுந்தான். ஒரு வெற்றுக் காகிதத்தை எடுத்தான்.........எதையோ எழுதினான். அங்கு இருந்த உடைந்த பலகைமீது வைத்தான்.

# 7

அடுத்த நாள் மகாதேவன் நெடுநேரங் கழித்து எழுந்திருந்தார். காலைக் கடன்களைச் செய்து முடித்தார். பிறகு யசோதையைக் காலைச் சிற்றுண்டி தயாரிக்குமாறு கேட்டுக் கொண்டிருந்தார். கிரிஜா உள்ளே நுழைந்தாள். அவள் பேசமுடியாமல் வாயடைத்து நின்றாள். யசோதை யருகில் சென்றாள்........ பதை பதைக்கும் உதடுகளுடன் சொன்னாள். "மாமி, நேரமாகி விட்டதே என்று அப்பாவை எழுப்ப அறைக்குச் சென்றேன். ஆனால்......... ஓ! மாமி.........அவர் என்ன செய்து கொண்டார் என்று போய்ப் பாருங்களேன்........அம்மா மயங்கிச் சுவரில் சாய்ந்து கிடக்கிறாள்."

எல்லாரும் துக்காராமனின் அறைக்குள் வந்தனர். அது ஒரு மரணக் காட்சி! கூரையி



லிருந்து ஒரு கயிறு தொங்கிக் கொண்டிருந்தது. அதன் ஒரு நுனியைத் துக்காராமன் தன் கழுத்தில் சுருக்கிட்டுக் கொண்டிருந்தான். அவன் தற்கொலை செய்து கொண்டு விட்டான். அவனுடைய உலர்ந்த நாக்கு தொங்கிக் கொண்டிருந்தது.........கண்களிலிருந்து விழிகள் பிதுங்கி வெளிவந்திருந்தன. ரங்கம்மா வாயடைத்துப் போய் சுவரில் சாய்ந்து கிடந்தாள்.........வெளிறிய முகம். பரந்த உலகில் வெறிச் சென்ற பார்வையுடன் வெற்றிடத்தை விழித்தவாறு இருந்தாள். பெஞ்சின்மீது ஒரு காகிதம் இருந்தது. அதில் ஏதோ எழுதப் பட்டிருந்தது.

"ரங்கம்மா,

நான் உன் உள்ளத்தையும் உடலையும் வதைத்து விட்டேன். இப்பொழுது உனக்குத்

தேவையான வசதி இருக்கிறது. கிரிஜாவுக்கும் மணமாகி விட்டது.........எனக்கு மிகவும் மகிழ்ச்சி. ஆனால், நான் வாழத்தகுதியற்றவன் என்று நினைக்கிறேன். அதனால் நான் தற் கொலை செய்து கொள்கிறேன். தயவு செய்து என்னை மன்னித்து விடு. கிரிஜா, என் செல்வக் குழந்தையே, உனது தந்தை பலவிதத்திலும் குற்றமுள்ளவன் ........முடிந்தால் அவனை மன் னித்து விடு. உங்கள் இருவரையும் ஆண்டவன் ஆசீர்வதிப்பாராக.

துக்காராமன்.........''

இந்தக் காட்சியில் போலீஸ் வந்தது. விசாரணைகள், கேள்விகள், பரிசோதனை, குறுக் குச் சோதனை...... ..என்று பல. மகாதேவன் இவை போன்ற எல்லாச் சடங்குகளையும் கவனித்துக் கொண்டார். முடிவில் துக்காராம னின் உடல் மயானத்துக்கு எடுத்துச் செல்லப் பட்டது.

ஆனால் ரங்கம்மா ஒரு துளி கண்ணீர் கூடச் சிந்தவில்லை. சிவராமன். பாஸ்கரன், நாரா யணன் மற்றெல்லாரும் அவளை அழச் செய்யத் தம்மாலான வரை முயன்றனர். ஆனால் யாவும் பயனற்றவை ஆயின. எல்லாரும் செய்வ தென்ன வென்று தெரியாமலிருந்தனர்.........

யசோதை எழுந்தாள். நாராயணனையும் கிரிஜாவையும் அழைத்தாள். அவர்கள் அவள் காலைத் தொட்டு வணங்கினர். யசோதை கூறினாள், "ரங்கம்மா, உனது செல்லக் குழந்தை இனிமேல் உன்னோடு இருக்கமாட் டாள். நீ இனிமேல் தனிப்பட்டவள்தான். ஒருத்திதான்........ஒருத்திதான்!" கிரிஜா கண் ணீருடன் மேல் நோக்கிப் பார்த்தாள்.........

தனது தாயைச் சோகப் பார்வை பார்த்தாள்.........பிறகு ரங்கம்மா வீறிட்டு அழத் தொடங்கினுள். "ஓ! என் குழந்தை, நீ என்னை விட்டுவிட்டுப் போகப் போகிருயா?" என்ருள். அவள் நெடு நேரம் அழுதவாறே இருந்தாள்.........பிறகு தன் மகளிடம் கூறினுள். "கிரிஜா, குடிப்பழக்கமும் சூதாடுவதும் தவிர, .........உன் தந்தை என்னிடம் எவ்வளவோ அன்பாகத்தான் இருந்தார். என்னைப் பாசத்தோடு நடத்தினுர். என் ஆசை யெல்லாம் ஈடேற்றினுர். இப்போது அவர் இல்லை.........என் வாழ்க்கைத் துணைவர் என்னைத் தனியே விட்டு விட்டார்.........நீயும் என்னை விட்டுச் செல்கிருய்.........போ. போய் சந்தோஷமாயிரு.........ஆனுல், முடிந்தவரையில் உன் தாயாகிய என்னை மறக்காமல் இரு!"

## 8

**கி**ரிஜா இப்பொழுது நாராயணனுடன் வசித்தாள். மகாதேவனும், யசோதையும் அவள் செய்யும் சிறிய சேவையையும் மிகவும் பாராட்டினர். ரங்கம்மா தனது வாழ்நாளைப் பெரும்பாலும் காய்கறிக் கடையில் கழித்தாள். கர்ணனைப் போல, கருணையுடன் தருமம் செய்தாள். மதச் சம்பிரதாயச் சடங்குகளில் மனத்தைச் செலுத்தினுள்.

சிவராமன் மகாதேவனை அடிக்கடித் தனது மகிழ்ச்சி நிறைந்த குடும்பத்துடன் வந்து பார்ப்பான். மகாதேவனைப் பார்த்துச் சொல்வான், "மகாதேவன் பார்ப்பதற்கு எளிமை

யானவர். ஆனால் அவர் ஒருவர்தான் உண்மையை உணரும் சக்தியுள்ளவர். அவருக்கு தீர்க்க தரிசனம் உண்டு. அவர் மிகவும் சிக்கனக்காரரும் இல்லை, செலவாளியும் இல்லை. அவருக்கு எப்படி எங்கே சேமிக்க வேண்டும் என்று தெரியும். அதனால்தான் அவர் எனக்கு சிரமம் ஏற்படும்பொழுது உதவ முடிகிறது. அதனால்தான் அவர் ரங்கம்மாவுக்கு வழிகாட்ட முடிந்தது. நாராயணனைப் படிக்க வைக்க முடிந்தது. சீதையின் திருமணத்தையும் அவர் தடபுடலாக நடத்தப் போகிறார்.''

ரங்கம்மா நாராயணனைப் பார்த்து மகிழ்வாள். "உனது தந்தையைப் போல இருக்க வேண்டும்,'' என்பாள்.

மகாதேவன் அடக்கமாகச் சொல்வார். "என்னை அதிகமாகப் புகழவேண்டாம்!''

சிவராமன் இடைமறித்துச் சொல்வார், "இவ்வளவு அடக்கமாக இருக்க வேண்டாம். நீங்கள்தான் தெய்வம்........''

சிரிப்பு, மகிழ்ச்சி, இன்பம்.........ஆனந்தம் இவை குடும்பத்தின் சூழ்நிலை.........இதுவல்லவா தெய்வம் உறைகின்ற தேவாலயம்!

